REGD. No: TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812318 4 பக்கம் விலை 35 காசு

**மேதை**

சிலர்தான் படிக்காமலேயே மேதை ஆக முடியும். ஆனால் அனைவருமே மேதையாக வேண்டும் என்றால் படிக்காமல் இருக்க வேண்டும் என்று பொருள் கொண்டு விடக்கூடாது.


-பேரறிஞர் அண்ணா

# அண்ணா


நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**ஏழைகள்**

ஒடுக்கப்பட்டுக் கிடக்கும் ஏழைகளுக்கு நாம் நிவாரணம் அளிக்க வேண்டுமானால், இருப்பவர்களிடமிருந்து பணத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்.


-நேரு

மலர் 4 சென்னை 3-4-1980 வியாழன் வெளியூர் 4-4-1980 வெள்ளி இதழ் 146

## நாஞ்சிலார்... நீங்களுமா?

“அண்ணா தி.மு. கழகத்தை விட்டு விலகிச் செல்பவர்களுக்கு அனுதாபக் கூட்டம் போடவேண்டி வரும்'-என்று புரட்சித்தலைவர் கூறியதாக ஒரு அண்டபுளுகை-ஆகாசப் புளுகை அவிழ்த்து விட்டார் கருணாநிதியார்.

கருணாநிதியின் இந்தப் பொய்யைத் தனது அறிக்கை மூலம் நாவலர் நேற்று தூள்தூளாக்கினார்.

உடனே, கருணாநிதி சார்பில் வக்காலத்து வாங்கி நாவலர் கூறியது பொய் என்றும், கருணாநிதி சொன்னதே மெய் என்றும் நாஞ்சிலார் வாதாடியிருக்கிறார்.

கருணாநிதி சொன்னதுபோல புரட்சித்தலைவர் பேசியது உண்மைதான் என்கிறார் நாஞ்சிலார்.

ஆனால் சத்தியா ஸ்டுடியோவில் பேசவில்லை-சுதர்சன் ஓட்டலில் பேசினார் என்று ஒரு திருத்தம் கொண்டு வந்திருக்கிறார்.

புரட்சித்தலைவர் அப்படிப் பேசிய பேச்சை தாம் 'டேப்' செய்ததாக கூறும் நாஞ்சிலார்; 'எங்கே அந்த டேப்பைப் போட்டுக் காட்டுங்கள்' என்று கேட்பார்களே எனப் பயந்து-'அந்த டேப்பை எம். ஜி.ஆரே எடுத்து வைத்துக் கொண்டார். என்று ஒரு சப்பைக்கட்டும் காட்டியிருக்கிறார்.

-: புலிகேசி :-

ஒரு பொய்யைக் கூறுவதும்; அந்தப் பொய் அம்பலமாகும் போது அதே பொய்யை நிலைநிறுத்த அடுக்கடுக்கான பொய்களைக் கூறுவதும் கருணாநிதியின் பாணி.

நாஞ்சிலார்... நீங்களுமா?

சேர்ந்த இடத்தின் மகத்துவமா இது?

கட்சியிலிருந்து விலகுகிறவர்களைத் தீர்த்துக்கட்டும் திட்டத்தை தமிழக அரசியலிலேயே ஒரே ஒரு தலைவர்தான் கையாண்டார்.

அதற்கு சாட்சியம் இதே நாஞ்சிலார்தான்.

தி மு க விலிருந்து விலகி, நாஞ்சிலார் அண்ணா தி.மு.க. வில் சேர்ந்தபோது- கட்சியிலிருந்து விலகிய ஒரே காரணத்துக்காக சென்னை விமான நிலையத்தில் இவரைத் தீர்த்துக்கட்ட முயற்சி நடந்தது.

நாவை மாற்றிக்கொள்ள வேண்டிய கட்டாயத்தால் நாஞ்சிலார் இதை மறந்திருக்கலாம்-நாடு மறக்கவில்லை.

கடந்த சட்டமன்றக் கூட்டத் தொடர் நடந்து கொண்டிருந்தபோது ஒருநாள்.

சட்டமன்றம் கூடும் இடத்துக்கு அருகேயுள்ள 'குளுகுளு' அறையில் தமது குழாத்துடன் உட்கார்ந்திருக்கிறார் நாஞ்சிலார்.

புலனாய்வுத்துறை போலீசாரிடமிருந்து முதலமைச்சருக்கு வந்த ஒரு ரகசிய செய்தியின் குறிப்பு ஒன்று- நாஞ்சிலாரின் பார்வைக்காக அனுப்பிவைக்கப்பட்டு-அவர் கையில் சேர்க்கப்படுகிறது.

சந்தேகத்துக்கு அப்பாற்பட்ட-சஞ்சலத்துக்கோ, சபலத்துக்கோ ஆட்படாத நாஞ்சிலார் சாவகாசமாக அந்த ரகசியக் குறிப்பைப் பிரித்துப்பார்க்கிறார்.

அவர் முகம் வெளிறிப் போகிறது.

அந்தக் குறிப்பிலிருந்த விவரத்தை அருகிலிருந்த நண்பர்களிடம் அவரே கூறுகிறார்.

“நானும்(நாஞ்சிலார்) எட்மண்ட்; பி.டி. சரஸ்வதி, சுப்புலட்சுமி ஆகியோரும், இன்னொருவருமாக ஐந்து பேர் அண்ணா தி.மு.க.விலிருந்து விலகி தி.மு.க.வில் சேரப்போவதாக புலனாய்வுத்துறைப் போலீசார் முதல்வருக்குச் செய்தி கொடுத்திருக்கிறார்கள்.”

அண்ணா தி. மு. கவிலிருந்து ஆட்களை இழுக்க கருணாநிதி பகிரதப் பிரயத்தனம் செய்து கொண்டிருந்த நேரம் அது.

இதையும் மறந்துவிடக் கூடாது:

ரகசியக் குறிப்பை மற்றவர்களுக்குக் கூறிய நாஞ்சிலார் கீழ்க்கண்டவாறு ஆவேசமாகக் கூறினார்.

“என்னைக் கொன்று என் மனைவியை விதவையாக்க முயன்ற ஒரு கட்சியிலா நான் போய் சேருவேன்? போலீசார் இப்படித் தகவல் தரலாமா? இதை நீங்கள் நம்புகிறீர்களா?”

அருகே இருந்தவர்கள் ஆச்சரியப்பட்டனர்.

நாஞ்சிலார் பற்றியும், மற்றவர்கள் பற்றியும், வந்த தகவலை நம்ப மறுத்தனர்.

இன்று அது நடந்துவிட்டது. நம்பமுடியாத தகவல் எனக் கருதப்பட்ட தகவல் முழுக்க முழுக்க உண்மையாகி விட்டது.

தி.மு.க. விலிருந்து விலகியதற்காக தன்னைக் கொல்ல முயன்ற கட்சி என்று இப்போது அவர் போய் சேர்ந்திருக்கும் கட்சியின் தன்மையை அன்று தனது வாயாலேயே வெளிப்படுத்தியிருக்கிறார் நாஞ்சிலார்.

அப்போது, அவருடனிருந்த சாட்சிகளும் இருக்கின்றனர்.

அந்த நாஞ்சிலார்தான்- கட்சியை விட்டு போகிறவர்களுக்கு அனுதாபக் கூட்டம் போட வேண்டியிருக்கும் என்று புரட்சித்தலைவர் மீது கூறப்பட்ட அவதூறை உண்மைப்படுத்த முனைந்திருக்கிறார்.

இடம் மாறிப்போகலாம் - ஆனால் தடம் மாறிப் போகலாமா?

## தொகுதி பங்கீடு முடிவு:

# தி. மு. க. வில் கொந்தளிப்பு

### விரக்தி நிலையில் கருணாநிதி

சென்னை, ஏப். 3 இந்திரா காங்கிரசும் தி.மு.க.வும் சம அளவில் தொகுதிகளைப் பங்கீடு செய்து கொண்டிருப்பதற்கு தி.மு க.வில் பலத்த எதிர்ப்பு ஏற்பட்டிருக்கிறதுஇந்த முடிவைக் கேட்டு தி.மு.க. தொண்டர்கள் கொதிப் படைத் திருக்கிருர்கள்.

மேல்மட்டத் தலைவர்களின் எதிர்ப்பையும், கீழ்மட்டத் தொண்டர்களின் கொதிப்பையும் உணர்ந்த கருணாநிதி, அவர்களைச் சமாதானப் படுத்த வழி இல்லாமல் திணறிக் கொண்டிருக்கிறார்.

நடக்க இருக்கும் தமிழக சட்டமன்றத் தேர்தலில் தமிழகத்தில் உள்ள 234 தொகுதிகளில் இந்திரா காங்கிரஸ் 109 தொகுதிகளிலும், திமுக 109 தொகுதிகளிலும் போட்டியிடுவதென்று அந்த இரண்டு கட்சிகளும் பங்கீடு செய்திருக்கின்றன.

இந்த உடன்பாடு விவரத்தை நேற்று முன்தினம் தமிழக இந்திராகாங்கிரஸ் தலைவர் எம். பி. சுப்பிரமணியம் வெளியிட்டார்.

இரண்டு கட்சிகளும் சம அளவு தொகுதிகளில் போட்டியிடும் என்ற முடிவை தி. மு. க. மேல்மட்டத்தில் உள்ள தலைவர் கடுமையாக எதிர்க்கின்றனர். இதுகுறித்து கருணாநிதியிடம் அவர்கள் நேரடியாகவே சூடாக விவாதித்ததாகத் தெரிகிறது.

அவர்களைச் சமாதானப் படுத்தமுயன்றகருணாநிதி, “எது எப்படிஇருந்தாலும் எம். ஜி.ஆர். முதலமைச்சராகவருவதைதடுக்கவேண்டும். அது தான் இப்போது நமது லட்சியம் இதில் கவுரவப் பிரச்சினை எதையும் பார்க்க வேண்டாம்” என்று கருணாநிதி கூறியதாகவும் ஆனாலும் எதிர்ப்பாளர்களைத் திருப்திபடுத்த முடியவில்லை என்றும் அறியப்படுகிறது.

### தொண்டர்கள் குமுறல்

இந்திரா காங்கிரசுக்கும் தி.மு.க. வுக்கும் சமஅளவு தொகுதிகள் என்ற முடிவை தி.மு.க. தொண்டர்கள் மூழுமூச்சாக எதிர்க்கிறார்கள். தொகுதி பங்கீடுபற்றிய செய்தியைப் பத்திரிகைகளில் பார்த்த அவர்கள் கடந்த இரண்டு நாட்களாக சட்டமன்ற திமுக அலுவலகத்துக்கு சாரிசாரியாக வந்து கருணாநிதியிடம் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்து வருகின்றனர்.

“நமக்கும் இந்திரா காங்கிரசுக்கும் சமஅளவு தொகுதிகள் என்றால் நம் அளவுக்கு அந்தக் கட்சிபலம் வாய்ந்த கட்சியா? அதை நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா?” என்று திமுக ஊழியர்கள் கருணாநிதியை கேட்டிருக்கின்றனர்.

“இந்த விகிதப்படி கூட்டணியாகப் போட்டியிடு வதைவிட தி. மு. க. தனியாகவே தேர்தலில் போட்டியிடலாம்” என்றும் அவர்கள் வாதாடியதாகத் தெரிகிறது.

### கருணாநிதி விரக்தி

அவர்களைச் சமாதானப் படுத்தும் முயற்சியில் கருணாநிதி தோல்வி கண்டு விட்டார் என்றே சொல்ல வேண்டும். திமுக ஊழியர்களின் அதிருப்தி அகலவில்லை.

இதன் காரணமாக கருணாநிதிவிரக்தியடைந்த நிலையில் இருக்கிறார்.

இந்த தொகுதி உடன்பாடு திருப்திதானா என்று நிருபர்கள் கேட்டதற்குக் கருணாநிதி பதில் கூற மறுத்துவிட்டதுகுறிப்பிடத்தக்கது. 'திருப்திதான் என்று கருணாநிதி சொன்னால் தி. மு. க. வில் இருக்கும் கொந்தளிப்பு அதிகமாகும், 'திருப்தி இல்லை' என்று சொன்னால் இந்

(2-ம் பக்கம் பார்க்க)

## மதுரை நகர இந்திரா காங்கிரசில் கோஷ்டிப்பூசல்

மதுரை, ஏப். 3-மதுரையில் இந்திரா காங்கிரஸ் சார்பில் ஆய்வுக்குழு சென்று வேட்புமனு பெற்ற போது பயங்கர மோதல் ஏற்பட்டது. மதுரையில் கோஷ்டிப்பூசல் பயங்கர உருவெடுத்துள்ளது.

சுப்பராமன் கோஷ்டிக்கும் ஆ. ரத்தினம் கோஷ்டிக்கும்நேற்று இதைஒட்டி பயங்கரமோதல் ஏற்பட்டது.

மதுரையில் கோஷ்டிப் பூசல் நீண்ட காலமாக இருந்துவருகிறது.

மதுரை நகர தலைவராக ஆ. ரத்தினம் இருந்து வருகிறார். துணைத் தலைவராக எம். கே. ராமமூர்த்தி, செயலாளர் ராமகிருஷ்ணன் உட்பட 4 பேர்களை ஆ. ரத்தினம் சஸ்பெண்ட் செய்தார்.

இந்த நால்வரும் ஏ. ஜி. சுப்பராமன் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் என்று கூறப்படுகிறது.

இவர்கள் சார்பில் இந்த தேர்தலுக்கு வேட்புமனு தாக்கல் கூடாது என்றும் ஆ. ரத்தினம் தடை விதித்து இருந்தார்.

நேற்று இந்திரா காங்கிரஸ் ஆய்வுக்குழு மதுரைக்கு வந்தது.

அப்போது சஸ்பெண்ட் செய்யப்பட்டவர்களில் ஒருவரான ராமகிருஷ்ணன் மதுரை கிழக்குத் தொகுதிக்கு வேட்பு மனு கொடுக்க வந்தார்.

அவர் வேட்புமனு தருவதை ஆ. ரத்தனம் ஆட்சேபம் செய்தார்

இந்த ஆட்சேபணையை ஆய்வுக்குழு நிராகரித்து அவரது வேட்பு மனுவை பெற்றது.

இந்த செய்கையால் ஆய்வுக்குழுத் தலைவர் மீது ஆ. ரத்தினம் கோஷ்டி வசைபாட தொடங்கியது.

இந்த தகவல் வெளியே பரவியதும் ரத்தினம் கோஷ்டிக்கும் ராமகிருஷ்ணன் கோஷ்டிக்கும் பலத்த மோதல் ஏற்பட்டது.

இந்த சம்பவத்தால் மதுரையில் கோஷ்டித் தகராறு முற்றி இருக்கிறது.

அண்ணாமலைப் பல்கலைக் கழக தி.மு.க., இந்திரா காங்கிரசை சேர்ந்த மாணவர்கள் புரட்சித்தலைவர் முன்னிலையில் அவருக்கு மாலை அணிவித்து அண்ணா திமுகவில் சேர்ந்தனர்.

## கரும்பு விவசாயிகள் போராட்டம்:

# சட்டத்தை மீறிய நிர்வாகம் மீது நடவடிக்கை எங்கே?

### விவசாயிகள் சங்கம் கேள்வி

சென்னை, ஏப். 3-நெல்லிக்குப்பம் சர்க்கரை ஆலை கரும்பு விவசாயிகளின் நியாயமான கோரிக்கைகளை நிறைவேற்றி, இது விஷயத்தில் சட்டத்தை மீறிய நிர்வாகத்தினர் மீது நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று விவசாயிகள் சங்கம்கோரியிருக்கிறது.

இதுபற்றி சக்தி சர்க்கரை ஆலைத்தொகுதி விவசாயிகள் முன்னேற்ற சங்கத் தலைவர் ஏ. எம். ராஜா விடுத்துள்ள ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

நெல்லிக்குப்பம் பாரிக் கம்பெனி கரும்பு விவசாயிகள் நடத்திவரும் போராட்டம் மிக மிக நியாயமானதே. ஆலைச் சொந்தக்காரர்கள் விவசாயிகளின் 27 அம்சக் கோரிக்கைகளில் விலை உயர்வு கோரிக்கை ஒன்றைத்தவிர மற்ற கோரிக்கைகள் அனைத்தையும் ஏற்றுக் கொண்டிருப்பதாக நிர்வாகத்தினர் கூறுகிறார்கள்.

பாண்டிச்சேரி உள்பட தமிழகத்தில் உள்ள 21 சர்க்கரை ஆலைகட்கு கரும்பு கொடுத்துவரும் விவசாயிகளைப் பொறுத்த வரையில் கட்டுபடியாகும் விலைதான் அவர்களுக்கு உயிர் கோரிக்கை

அவர்களுடைய மற்ற கோரிக்கைகளில் பெரும் பகுதி 1949-ம் வருட மதராஸ் சுகர்பேக்டரி கண்ட்ரோல் ரூல்ஸ் சட்டப்படியும் 1966-ம் வருடத்தில் மத்திய அரசின் கரும்பு கண்ட்ரோல் சட்டப்படியும் ஆலை நிர்வாகம்செய்து கொடுக்கக் கடமைப்பட்டவர்கள் ஆவார்கள்.

ஆகவே இதுவரையில் ஆலை நிர்வாகம் தங்கள் ஆலைகட்குக் கரும்பு கொடுத்து வரும் விவசாயிகட்குசட்டப்படி கொடுக்க வேண்டிய சலுகைகளைக் கொடுக்காமல் ஏமாற்றி வந்திருக்கிறார்கள் என்பது மிகத்தெளிவாகத் தெரிகிறது.

விவசாயிகளை ஏமாற்றிய இந்த நிர்வாகத்தினரின் பேரில் இந்த அரசு இதுவரை என்ன நடவடிக்கை எடுத்துள்ளது? சட்டத்தைப் புறக்கணித்த நிர்வாகத்தின் பேரில் நடவடிக்கை எடுப்பதற்குப் பதிலாக, நியாயத்திற்குப் போராடும் விவசாயிகளின் பேரில் நடவடிக்கை எடுத்துள்ளது வன்மையாகக் கண்டிக்கத்தக்கதாகும்.

மத்திய விவசாய அமைச்சர் சாமிநாதன் அவர்கள் நிருபர்கட்குஅளித்தபேட்டியில் இந்தப் போராட்டத்தைப்பற்றிக் குறிப்பிடுகையில் அரசாங்கம் ரூ125 என நிர்ணயித்துள்ளது அதற்கு மேல் விலை உயர்த்திக் கொடுக்கும்படி தனியார் சர்க்கரை ஆலைகளை அரசு வலியுறுத்தஇயலாது என்று கூறியுள்ளார்.

விவசாயஅமைச்சர் சாமிநாதன் அரசாங்கத்தின் சட்டத்தைப் புரிந்து கொள்ள இயலாதவராக இருப்பது வேதனைக்கும் விந்தைக்கும் உரிய ஒன்றாகும்!

கரும்புக்கு டன் ஒன்றுக்கு 125 ரூபாய் என்பது மத்திய அரசு நிர்ணயித்த குறைந்தபட்ச விலையே ஆகும். இந்த ரூ 125க்கு மேல் அவ்வப்போதைய நிலைமைக்குத் தகுந்தாற் போல் உயர்த்திக் கொடுப்பதற்கான அதிகாரம் மாநில மத்திய அரசுகட்கு சட்டப்படி வழங்கப்பட்டுள்ளது.

உதாரணத்திற்கு உத்தரப் பிரதேசத்தில் டன் ஒன்றுக்கு ரூ 250 வீதம் கொடுத்து வரப்படுகிறது. அதுவே போதாதென்று அவர்கள் போராடி வருகிறார்கள் என்பதை மத்திய அமைச்சர் சாமிநாதனின் கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன்.

மேலும் இந்த ஆண்டு சர்க்கரை ஆலைகள் பெரும் இலாபம் ஈட்டிவருகின்றது. 4000 டன் அறவைத் திறன்கொண்ட ஈ.ஐ.டி. பாரி ஆலை இந்த ஆண்டு நல்லமுறையிலே அறவைச் செய்யுமானால் குறைந்த பட்சம் 8 கோடி ரூபாய் நிகர லாபம் அடையும்.

இந்த நிலையில் விவசாயிகட்கு குறைந்த பட்சமாக 175ரூ கொடுக்க முடியும் ஆகவே விவசாயிகளின் விலைஉயர்வுப் போராட்டம்மிகமிகநியாயமானதே

(2-ம் பக்கம் பார்க்க)

# கழக உறுப்பினர் அட்டை வழங்குதல்

கீழ்க்கண்ட ஊர்களுக்குச் சம்பந்தப்பட்ட அமைப்பாளர்கள் முகவரிக்கு உறுப்பினர் அட்டைகள் அஞ்சல் மூலமாக அனுப்பிவைக்கப்பட்டுள்ளன.

அமைப்பாளர்கள் உறுப்பினர் அட்டைகளை முறையாக கழக உறுப்பினர்களுக்கு உடனடியாக வழங்கிட வேண்டும்,

உறுப்பினர் அட்டைகள் வழங்குவதில் எவ்விதக் குறைபாடுகளும் இல்லாமல் செயல்படுவது அமைப்பாளர்களின் பொறுப்பாகும். வழங்க மறுத்தால் அமைப்பாளர்மீது கடுமையான முறையில் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும். உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் உறுப்பினர் அட்டையைப் பாதுகாப்பாக வைத்திருக்க வேண்டும்.

உறுப்பினர் சேர்க்கப்பட்டுள்ள, உறுப்பினர் தாள்களையும், உரிய தொகையும் உடனடியாக தலைமை நிலையத்திற்கு அனுப்பிவைக்குமாறு பொறுப்பானவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

**எம். எஸ். அப்துல்காதர்**
தலைமை நிலையச் செயலாளர்

## சென்னை மாவட்டம்

| | | |
|---|---|---|
| 1-வது | வட்டம் | எம். மோகன் |
| 3-வது | „ | எஸ். அருணாசலம் |
| 4-வது | „ | சோ. கணேசன் |
| 5-வது | „ | ரெ. பெருமாள் |
| 6-வது | „ | ச. நாகேந்திரன் |
| 8-வது | „ | இராமமூர்த்தி |
| 11-வது | „ | ஆர். எம். ஸ்ரீராமலு |
| 13-வது | „ | வி. ஆறுமுகம் |
| 15-வது | „ | இரா. து. சந்தானம் |
| 16-வது | „ | வி. சந்திரன் |
| 18-வது | „ | டி. சந்திரபாபு |
| 20-வது | „ | கே. ஏ. சமது |
| 22-வது | „ | கே. எல். கோவிந்தராசன் |
| 23-வது | „ | பி. தேசிங் |
| 24-வது | „ | எம். கே. சாமிநாதன் |
| 25-வது | வட்டம் | நா. தேவராசன் |
| 29-வது | „ | பிரம்பை மொய்தீன் |
| 31-வது | „ | அ. பன்னீர்செல்வம் |
| 33-வது | „ | இ. பி. பாஸ்கரன் |
| 34-வது | „ | உ. ஞானகிராமன் |
| 35-வது | „ | வ. நீலகண்டன் |
| 30-வது | „ | எம். ஜி. ஆர். கி. சீதாராமன் |
| 42-வது | „ | எல். ஜெயபால் |
| 44-வது | „ | எஸ். கிருஷ்ணசாமி |
| 45-வது | „ | ஜெ. செங்கோல்தாசன் |
| 46-வது | „ | சி. சோ. சுந்தரம் |
| 49-வது | „ | வி. நடராசன் |
| 50 வது | „ | வை. தருமலிங்கம் |
| 52-வது | „ | வி. கே. கபூர் |
| 53-வது | „ | கே. எல்லப்பன் |
| 54-வது | „ | பி. எஸ். சச்சிதானந்தம் |
| 55-வது | „ | ஜி. எஸ். பாபு |
| 57-வது | „ | சி. பி. விஷ்ணுகுமார் |
| 58வது | வட்டம் | மு. பா. மாரி |
| 62-வது | „ | பி.எம்.பரசுராமன் |
| 63-வது | „ | எம்.எஸ்.விக்டர்தாஸ் |
| 68-வது | „ | பி.மணியன் |
| 70-வது | „ | கு. ஏழுமலை |
| 71-வது | „ | வி. ஏ. வேலாயுதம் |
| 73-வது | „ | நா. ரா. பாபு |
| 74-வது | „ | பி.எல்.ராதாகிருஷ்ணன் |
| 75-வது | „ | ஆ. செல்வராஜ் |
| 77-வது | „ | எ. இ. வெங்கடேசன் |
| 78-வது | „ | நா. துவாரகநாதன் |
| 79-வது | „ | வ. கோதண்டராமன் |
| 82-வது | „ | எஸ். ஜெயசந்திரன் |
| 83வது | „ | து. ஜெயகோபி |
| 87-வது | „ | வி. துரைராஜ் |
| 88-வது | „ | கோவை கணேசன் |
| 89-வது | „ | கதிர்சோமசுந்தரம் |
| 93-வது | „ | இரா. சின்னப்பன் |
| 97-வது | „ | தே. கோ. கண்ணன் |

## செங்கை மாவட்டம்

ஊர்பெயர் — அமைப்பாளர் பெயர்

87. புள்ளம்பாக்கம் - ஜி, செல்லப்பன்
பூரிவாக்கம் மதுரா கண்டிகை - டி. ராமதாஸ்
83. சேத்துப்பாக்கம் - கே. அரசன்
பாலவாக்கம் - பா. ஏகாம்பரம்
கன்னிகா புரம் - ஆர். சிட்டிபாபு
90. வெங்கல் - வெ. கு. சுந்தரம்
பெரியபாளையம் - பி. முத்து
பாகல்மேடு கிராமம் - இர. அரங்கன்
ஆத்துப்பாக்கம் - து. ராமன்
புள்ளம்பாக்கம் - க. கோபால்
மஞ்சங்காரணை - பி. ஸ்ரீராமுலுநாயுடு
கி. கண்டிகை - கே. பி. ஆனந்தன்
பெரும்முடிவாக்கம் - சி. சுப்ரமணியன்
ஆவாதிப்பேட்டை - ஏ. எம். மாரியப்பரெட்டியார்
ஸ்ரீராமாபுரம் - நா. கிருஷ்ணமூர்த்தி
ஊத்துக்கோட்டை - சீனுவாசன்
விநாயகபுரம் - டி. அரங்கநாதன்
மத்தூர் - வி. கோவிந்தராஜ்
மத்தூர் - பி. எஸ். நாகப்பன்
திருத்தணி - ஜி. எஸ். ஷண்முகம்
பொம்மராஜபுரம் - எஸ். இலக்குமணன்
பொதட்டூர்ப்பேட்டை - டி. வி. சுந்தரம்
அருங்குளம் - கிருஷ்ணன்
வேலஞ்சேரி - பி. ஜோதி
டி. ஆர். கண்டிகை - பி. ஜோதி
திருத்தணி - சித்தூர்ரோடு சி. ராதாகிருஷ்ணன்

## வட ஆற்காடு மாவட்டம்

110. வேட்டங்குளம் - பி. தினசேகரன்
புதுக்கேசாவரம் - எஸ். அகமத்ஜான்
தக்கோலம் - து. கோவிந்தசாமி
தக்கோலம் - என். நாராயணன்
வளர்புரம் - பி. முத்தப்பன்
பழையகேசாவரம் - எம். இ. தேவராஜ்
அம்மனூர் - கி. குப்புசாமி
வேளிய நல்லூர் - டி. சண்முகம்
வளர்புறம் - டி. கே. தங்கவேலு
அரக்கோணம் - எஸ். பாஷசாயபு
அனந்தாபுரம் - டி. நாகரத்தினம்
காட்டுப்பாக்கம் - ஆர். சி. பாண்டுரங்கன்
101-கிழாந்துரை - மாரியப்பன்
பரமேஸ்வரமங்கலம் - இ. செல்வம்
மஞ்சம்பாடி - மு. சுப்ரமணி
பள்ளூர் காலனி - என். அன்பழகன்
திருமாற்பேறு - அ. த. ஷண்முகம்
மகேந்திரவாடி - பி. சுப்ரமணி
பள்ளூர் கிராமம் - நா. கஜேந்திரன்
ஓச்சேரி - பி. ஆறுமுகம்
அத்திப்பட்டு - தெ. ஸ்ரீதரன்
சிறுகரும்பூர் - எஸ். கே. சுப்பிரமணியன்
அன்வர்திகான் பேட்டை - எச். ஜானிசாயபு
எடப்பாளையம் - எம். பரசுராமன்
வாணாபாடி - என். ரேணு
அல்லிகுளம் - சி. முருகன்
சுமைதாங்கி - எஸ் ஏ. சுப்ரமணியம்
வசூர்கிராமம் - ஏ. ஜெயவேலு
பூண்டி கிராமம் - பி. பி. மணி
எடக்குப்பம் - ந. திராவிடமணி
செங்காடு கிராமம் - டி. முநகையன்
பாகவெளி - பி. என். ஜெயபாலன்
செங்காடு - பூ. குப்புசாமி
பொன்னை - கே. வி. ராஜகோபால்
ராமபுரம் - ஏ. ஹேமாசந்திரன்
ஜம்புகுளம் - எம். விஸ்வநாதன்
காட்ராம்பாக்கம் - என். முனுசாமி
கரடிகுப்பம் - கே. வி. சுப்ரமணி
ரெண்டாடி - பி. முருகேசன்
மேல்விஷாரம் - எஸ். தேவராஜி
மாங்குப்பம் - பி. பழநி
மேட்டுமுள்ளுவாடி - எம். பி. எஸ். மணி
நந்தியாலம் - எம். நடராசன்
மாங்குப்பம் - சி, ஆறுமுகம்
சங்கணுவரம் - சேட் சாயபு
அரும்பாக்கம் - மண்ணுக் கவுண்டர்
கத்தியவாடி - எம். அர்சுனன்
முப்பது வெட்டி கிராமம் - எம்.எல். ஆனந்தகுமார்
குஞ்சாரபந்தாங்கல் - டி. முருகன்
கோக்கனூர் ஆர். கிருஷ்ணமூர்த்தி
பழைய மாங்காடு - டி, மணி
கத்தியவாடி - என், சீனிவாசன்
அனந்தாங்கல்மேட்டூர் - என். முருகன்
சாவந்தாங்கல் - டி. முனுசாமி
ஆற்காடு - ஏ ஜி. பெரியண்ணன்
அரும்பாக்கம் - ஆ. பெ. ராமலிங்கம்

மற்ற மாவட்ட, தொகுதி, ஒன்றியங்களில் உள்ள கிளைகளுக்கு உறுப்பினர் அட்டைகள் அனுப்பப்பட்டு வருகின்றன.

---

பத்திரிகையாளர்

# குஷ்வந்த்சிங் ராஜ்யசபை உறுப்பினராக நியமனம்

புதுடெலலி, ஏப். 3- பிரபல பத்திரிகையாளர் குஷ்வந்த்சிங், மற்றும் நடிகை நர்கீஸ் ஆகியோர் ராஜ்யசபை உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டுள்ளனர்.

ஏற்கனவே நியமன உறுப்பினர்களாகயிருந்த இந்தி எழுத்தாளர் லோகேஷ்சந்திரா நாகாலாந்தைச் சேர்ந்த ஸ்தாபேகொ ஆகியோர் இரண்டாவது முறையாக உறுப்பினர்களாக நியமனம் செய்யப்பட்டுள்ளனர்.

புதுவை அரசின் முதல்சாதனை

# சட்டசபை உறுப்பினர்கட்கு சலுகைகள்

பாண்டிச்சேரி, ஏப். 3- மாநில சட்டசபை உறுப்பினர்களுக்கு பல புதிய சலுகைகளை புதுவை அரசு அறிவித்துள்ளது.

சட்டசபை உறுப்பினர்களுக்கு தினப்படி 25 ருபாயிலிருந்து 35 ரூபாயாக உயர்த்தப்படுகிறது. பயணப்படி 100 ரூபாயிலிருந்து 250 ரூபாய் உயர்த்தப்படுகிறது.

இதோடு டெலிபோன் அலவன்சாக மாதம் 100 ரூபாய் வழங்கப்படும்.

இந்த சலுகைகளை பற்றி மாநில சட்டசபையில் முதலமைச்சர் டி. ராமச்சந்திரன் அறிவித்தார்.

கழக அரசு அறிவித்தவாறு

# வேலைகொடு: மாஜி ராணுவத்தினர் ஆர்ப்பாட்டம்

சென்னை, ஏப். 3- சென்னை நகரில் இரவு ரோந்துப்பணிக்காக 292 முன்னாள் ராணுவத்தினருக்கு வேலையளித்து கழக அரசு உத்தரவிட்டிருந்தது.

இதன்படி, வேலையில் வந்து சேருமாறு இவர்களுக்கு உத்தரவு அனுப்பப்பட்டது.

இந்த உத்தரவுப்படி வேலையில் சேர வெளியூர்களிலிருந்துவந்தவர்களுக்கு ஏமாற்றமே காத்திருந்தது. 28 பேர்களுக்கு மட்டுமே வேலை, யளிக்கப்பட்டது மற்றவர்களுக்குவேலையளிக்கவில்லை இதையடுத்து முன்னாள் ராணுவத்தினர் இன்று போலீஸ் கமிஷனர் அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டம் நடத்தினார்கள்.

# உலகத் தமிழ் மாநாட்டு அலுவலகத்திற்கு மூடுவிழா

மதுரை, ஏப். 3- மதுரை மாநகரில் உலகத் தமிழ் மாநாட்டை மிகச் சிறப்பாக நடத்த புரட்சித் தலைவர் அரசு திட்டமிட்டு அதற்கான செயல்கள் நடைபெற்றுவந்தன.

கழக ஆட்சி கலைக்கப்பட்டபிறகு உலகத்தமிழ் மாநாட்டிற்கும் ஜனாதிபதி ஆட்சியில் கைவிரிப்பு நடத்தப்பட்டுஇருக்கிறது.

உலகத்தமிழ் மாநாடு தேதியை தள்ளிப்போட்டு ஜனாதிபதி அரசு உத்தரவிட்டது.

உலகத்தமிழ் மாநாட்டை ஒட்டி புரட்சித்தலைவர் அரசு ரூ. 4கோடிக்கு பல திட்டங்களை செயல்படுத்தி வந்தது.

மதுரை நகரை அழகாக்கவும் மாநாட்டு தொடர்பான வேலைகளும் கவனிக்கப்பட்டு வந்தன.

இந்த வேலைகளைக் கவனிக்க உலகத்தமிழ் மாநாட்டு அலுவலகம் ஒன்று மதுரையில் செயல்பட்டு வந்தது.

உலகத் தமிழ் மாநாட்டு சிறப்பு அதிகாரி ஒருவரும் நியமிக்கப்பட்டுஇருந்தார்

இப்போது அந்த அதிகாரி வேறு இடத்திற்கு மாற்றப்பட்டு விட்டார்.

அங்கு பணிபுரிந்த அலுவலர்களும் வேறு இடங்களுக்கு மாற்றப்பட்டு விட்டனர்.

ஜனாதிபதி ஆட்சியில் புரட்சித்தலைவர் ஆட்சியில் போடப்பட்ட பல திட்டங்கள் காலாவதி ஆக்கப்பட்டு வருகிறது.

அதில் உலகத்தமிழ் மாநாடும் இப்போது சேர்ந்துள்ளது.

# தி.மு.க.வில் கொந்தளிப்பு

(முதல் பக்கத் தொடர்ச்சி)

திரா காங்கிரசின் கோபத்துக்கு ஆளாக நேரிடும். எனவே கருணாநிதி பதில் கூறவில்லை.

மார்ச் மாதம் 1ந் தேதி டெல்லியில் இந்திராவைச் சந்தித்து, அன்றைக்கே இந்தசமஅளவு உடன்பாடு ஏற்பட்டுவிட்டதாகவும், அதையே இப்போது எம். பி. சுப்ரமணியம் அறிவித்திருப்பதாகவும் கருணாநிதி தெரிவித்திருக்கிறார் அப்போதே வெளியே சொன்னால் கட்சியில் எதிர்ப்புக் கிளம்பும், அதைச் சமாளிக்க முடியாது தேர்தல் நெருக்கத்தில் கூறினால் தேர்தலைக் காட்டி சமாதானப்படுத்தலாம் என்பதால்இவ்வளவு நாட்களாக இந்தமுடிவை அவர் வெளியே சொல்லவில்லை என்று கருதப்படுகிறது.

# உரிமைகள் பறிப்பு

தொகுதி உடன்பாடு விவரத்தை அறிவிக்கும் உரிமையைக்கூட தி.மு.க.விடமிருந்து இந்திரா காங்கிரஸ் பறித்துக் கொண்டதாக திமுக தொண்டர்கள் கருதுகிறார்கள்.

ஆளுக்கு 109 தொகுதிகள் போகமீதமுள்ள 16 தொகுதிகளைக் கூட தோழமைக் கட்சிகளுக்கு திமுக தன்னிச்சையாக ஒதுக்கமுடியாது

அந்த உரிமையிலும் இந்திரா காங்கிரஸ் பாதியைப் பறித்துக் கொண்டிருக்கிறது. அதன்படி இந்திரா காங்கிரஸ் இஷ்டத்துக்கு 8 தொகுதிகளும், திமுக விருப்பத்துக்கு 8 தொகுதிகளும் தோழமைக் கட்சிகளுக்கு ஒதுக்கப்படும்.

அப்படியானால் இந்திரா காங்கிரஸ் 117 தொகுதிகள்-தி.மு.க. 117 தொகுதிகள் என்று ஆகிறது,

இந்த 117 தொகுதிகளில் இந்திரா காங்கிரஸ் அதிக இடங்களைப் பிடித்து தி. மு. க. குறைந்த இடங்களைப் பிடித்தால் நிலைமை என்ன ஆகும்? என்ற கேள்வி தி. மு. க.வில் இப்போது எழுந்திருக்கிறது.

கோவையில்

# ஆசிரியர்- மாணவர் மோதல் 15 பேர் கைது: கல்லூரி மூடல்

கோவை, ஏப். 3 கோவை பி. எஸ் ஜி. கல்லூரி ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும் இடையே ஏற்பட்ட மோதலில் காண்டீன் ஜன்னல் கண்ணாடிகள் அடித்து நொறுக்கப்பட்டது. இதையொட்டி 15 மாணவர்களை போலீசார் கைது செய்தனர். கல்லூரியை காலவரம்பின்றி மூட கல்லூரி நிர்வாகம் முடிவு செய்துள்ளது.

இதுபற்றி கூறப்படுவதாவது:

கோவை பி.எஸ்.ஜி.கல்லூரியைச் சேர்ந்த 2 ஆசிரியர்கள் வேலைநீக்கம் செய்யப்பட்டதை கண்டித்தும், மற்றும் 15 ஆசிரியர்கள் மீதுள்ள வழக்குகளை வாபஸ் செய்யக்கோரியும் கல்லூரி ஆசிரியர்கள் 200க்கும் மேற்பட்டவர்கள் கோவை கலெக்டர் அலுவலகத்திற்கு ஊர்வலமாகச் சென்றனர்.

இந்த ஊர்வலத்திற்கு மாணவர்கள் எதிர்ப்பு தெரிவித்தனர். இதனால் ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் மோதல் ஏற்பட்டது.

இது கலவரமாக மாறி ஆசிரியர்களை மாணவர்கள் தாக்கியதாக கூறப்படுகிறது. இச்சம்பவம் உடனே போலீசாருக்கு கல்லூரி நிர்வாகம் மூலம் தெரிவிக்கப்பட்டது.

போலீசார் இடத்திற்கு விரைந்து சென்றனர். போலீஸ் வருவதை கண்ட மாணவர்கள் அருகில் உள்ள காண்டீனில் புகுந்தனர். அங்கு மாணவர்கள் உள்ளே விட அனுமதிக்காததால் காண்டீன் ஊழியர்களுக்கும் மாணவர்களுக்கும்மோதல் ஏற்பட்டு திண்பண்டங்கள் தூக்கி எறியப்பட்டன ஜன்னல் கண்ணாடிகள் அடித்து நொறுக்கப்பட்டன.

இச்சம்பவத்தையொட்டி போலீசார் 15 மாணவர்களை கைது செய்தனர். மேலும் ஆசிரியர்கள் தொடர்ந்து வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவதால் கல்லூரியை காலவரம்பின்றி மூடுவது என்று கல்லூரி நிர்வாகம் முடிவு செய்துள்ளது.

# அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக பேச்சாளர்கள் கருத்தரங்கம்

இம்மாதம் 6ம் தேதி சென்னையில் தமிழ்நாட்டில் உள்ள அனைத்துப் பேச்சாளர்கள் அனைவரும் கலந்துகொள்ளவிருக்கும் 'மாநிலப் பேச்சாளர்கள் கருத்தரங்கம்' நடைபெறவுள்ளது. இக்கருத்தரங்கத்தில் திருமிகு. புரட்சித்தலைவர் அவர்கள் கலந்துகொண்டு கருத்துரையாற்ற இருக்கின்றார்கள். இம்மாநில பேச்சாளர்கள் கருத்தரங்கத்தில் தலைமைக் கழகம் அங்கீகரித்துள்ள பேச்சாளர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவார்கள்.

**தலைமைக் கழகம்**
அனைத்திந்திய அண்ணா தி. மு. க.
சென்னை-600014.

# வடஆற்காடு மாவட்ட பேச்சாளர்-கலைக்குழு கருத்தரங்கு

வடஆற்காடு மாவட்டத்திலுள்ள கழகப் பேச்சாளர்கள், கலைக்குழுவினர், கலா நிகழ்ச்சியினர், நாடகக்குழுவினர் ஆகியோர் கருத்தரங்கு வரும் 5-ந் தேதியன்று மாலை 4 மணிக்கு வேலூர் முனிசிபல் டி. பி. அறை எண் 3ல் நடைபெறுகிறது.

இக்கருத்தரங்கில் கழக கொள்கை பரப்புச் செயலாளர் திருப்பூர் மணிமாறன் கலந்து கொள்கிறார். அனைவரும் வருகைதர வேண்டுகிறேன்.

**ஏ. கே. அரங்கநாதன்**
மாவட்ட அமைப்பாளர்

# பட்டதாரிகள் உதவித் தொகை: கழகபட்டதாரிகள் பேரவை சார்பில் சர்வ கட்சி கூட்டம்

நாள்: 3 4 80 மாலை 5 மணி அளவில்
இடம்: நூலக ஆணைக்குழு கட்டிடம் (L. L. A. Building) அண்ணாசாலை சென்னை 2.

தலைமை:

**டாக்டர் எச். வி. ஹண்டே எம் எல். சி.**

முன்னிலை: ப. அங்கமுத்து, எம். ஆர். ராஜேந்திரன்
வரவேற்புரை: ஆர். பொன்னுசாமி, ஆர் பாஸ்கர், வி. முத்தேலு

பங்கேற்போர்:

**டாக்டர் நாவலர்**

பா. ராமச்சந்திரன், தா. பாண்டியன், செய்குத்தம்பி, டாக்டர் சந்தோசம், குமரி அனந்தன், திருவாரூர் தங்கராசு, டி. என். அனந்தநாயகி, என். சங்கரய்யா, தி. சு. கிள்ளிவளவன், செங்கம் ஜப்பார், இ. மதுசூதனன், எம். பி. ஜியாவுதீன், கே. எஸ். சுந்தரேசன், சேட் முகமது

நன்றி உரை: எம். ஏ. ரஹீம்

**பட்டதாரிகள் அனைவரும் வருக! வருக!!**

# சென்னையில் கோர்ட்டை புறக்கணித்த 1500 வக்கீல்கள்

சென்னை, ஏப் 3- மத்திய பிரதேச மாநிலத்தில் குவாலியரில், வக்கீல்கள் தாக்கப்பட்டதையும், நீதிபதி மிரட்டப்பட்டதையும் கண்டித்து சென்னை நகரில் உள்ள வக்கீல்கள் கோர்ட்டை இன்று புறக்கணித்தனர்.

சுப்ரீம் கோர்ட் பார் கவுன்சலின் கோரிக்கைக்கு ஏற்ப சென்னை ஐகோர்ட் மற்றும் எழும்பூர்-சைதாப்பேட்டை உட்படபல்வேறு கோர்ட்டுகளைச் சார்ந்த 1500க்கும் மேற்பட்ட வக்கீலகள் இன்று கோர்ட்டுக்குச் செல்லாமல் புறக்கணித்தனர்.

# விவசாயிகள் சங்கம்கேள்வி?

(முதல் பக்கத் தொடர்ச்சி)

யாகும். அவர்களின் கோரிக்கைகளை நிர்வாகம் உடனடியாக ஏற்றுக் கொள்ள வேண்டும்

நியாயத்தைப் புறக்கணிக்கும் சீர்கேடான திறமையற்ற நிர்வாகக் குழுவையும் அதன் தலைவரையும் கைது செய்வதற்குப் பதிலாக தமிழக அரசு நிர்வாகத்தினருக்குப் பாதுகாப்பாயிருந்து வேடிக்கை பார்ப்பது வேதனையைத் தருகிறது.

உழவர்பெருங்குடியினரையும் அவர்கள் தலைவர்களையும் கைது செய்ததை சக்தி சர்க்கரை ஆலைத்தொகுதி விவசாயிகள் முன்னேற்ற சங்கத்தின் சார்பாக வன்மையாகக்கண்டிக்கிறேன்,

இந்த பிரச்சினையில் ஆளுநர் அவர்கள் உடனடியாகத தலையிட்டு விவசாயிகட்கு உரிய விலை கிடைக்கவும கைது செய்துள்ள அனைவரையும் நிபந்தனையின்றி விடுதலை செய்யவும் உடனடி நடவடிக்கை எடுக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு ஏ. எம். ராஜா தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

# பழைய வண்ணை

6-4-80 ஞாயிறு மாலை 7 மணிக்கு மணிகண்டமுதலி தெருவில் ஏ, லூர்துநாதன் தலைமையில் பேசுவோர்: அடியார், ரமணிபாய், ஜி. கே. எஸ், மதுசூதனன் ஏ. தாஸ், இரா. து. சந்தானம், செல்வகுமார், கு. பாலு, வண்ணை சத்தியா, தேவராஜ் மற்றும் பலர்.

# 103-வது வட்டத்தில் காளிமுத்து பேசுகிறார்

சென்னை, ஏப். 3 103-வது வட்டம் ராமாராவ் தோட்டம் மீர்சாகிப்பேட்டை மார்க்கெட் அருகில் நாளை (4-ந்தேதி) மாலை 6 மணிக்கு டி. பாஸ்கரன் தலைமையில் கழகப் பொதுக்கூட்டம் நடக்கிறது.

கா. காளிமுத்து, எம். ஏ., ஜெ. பாலன், ஏ.சி. புகழேந்தி, மு. கிருட்டினன் மு. ராசேந்திரன், வே, மகாலிங்கம் ஆகியோர் பேசுகிறார்கள்.

# தொழிற்சங்கத் தேர்தல்: தி.மு.க. தோல்வி

சென்னை, ஏப். 3- மெக்னியல் அண்ட் பேரி தொழிற் சங்கத்தில் நடைபெற்ற தேர்தலில் தி.மு.க இந்திரா காங்கிரசார் படுதோல்வி அடைந்தனர்.

இந்த தேர்தலில் வி. பி. சிந்தன் தலைவராகவும், அரிபட் உபதலைவராகவும் அண்ணாமலை செயலாளராகவும் மோகன்ராஜ் துணைச் செயலாளராகவும், பெர்னாண்டஸ் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மற்றும் 6 பேர் செயற்குழு உறுப்பினராகவும் தேர்வு செய்யப்பட்டனர்.

இவர்களை எதிர்த்து நின்ற தி. மு. க. இந்திரா காங்கிரசார் தோல்வி அடைந்தனர் என்று அருண்மணி தெரிவித்துள்ளார்.

புதுவை மாநிலத்தில்

# பென்சிலின் ஊசியால் நான்குபேர் மரணம்

பாண்டிச்சேரி, ஏப். 3- புதுவை மாநிலத்தில் கடந்த இரண்டாண்டுகளில் 4 பேர் பென்சிலின் ஊசி போட்டுக் கொண்டதால் இறந்து விட்டதாக மாநில சட்டசபையில் தெரிவிக்கப்பட்டது. இதில் டாக்டரின் கவனக்குறைவு காரணமாக ஒருவர் இறந்து விட்டதாகவும், சுகாதார அமைச்சர் ரேணுகா அப்பாத்துரை தெரிவித்தார்.

குடிபோதையில் பந்தயம்

# ஒருவரை ஒருவர் வெட்டி கொண்ட இருவர் கைது

சென்னை, ஏப் 3- குடிபோதையில் பந்தயம் கட்டி ஒருவரை ஒருவர் அரிவாளால் வெட்டிக்கொண்ட இரு ஆசாமிகள் கைது செய்யப்பட்டனர்.

இதுபற்றிய விவரம்வருமாறு:

சென்னை டி.பி.சத்திரத்தைச் சேர்ந்த தம்பா, (வயது 22), காசி (வயது 20) ஆகிய இருவரும் குடிபோதையில் அரிவாளைக் கொண்டு யார் முதலில் தாக்குவது என்பதை வைத்து பந்தயம் கட்டினார்களாம்.

இதன்படி தம்பா முதலில் ஓடிச் சென்று அரிவாளை எடுத்து காசியை வெட்டினாராம். இதன்பிறகு காசி தம் கையை வெட்டினாராம். இதனால் படுகாயமடைந்தநிலையில் இருவரும் கீழ்பாக்கம்மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளனர்

மேற்கண்ட இருவரையும், போலீசார் கைது செய்துள்ளனர்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications 275, Avvai Shanmugam Salai, Madras-14 and Printed by him at Print House, 1. First Main Road, United India Colony, Madras-24. Editor M. G. Chakkrapani

## கழக செய்திகள்

### ராயப்பேட்டை

3-4-80 வியாழன் மாலை 7 மணிக்கு சீனிவாசபுரம் 2 வது தெருவில் ஆர். குப்புசாமி தலைமையில் பேசுவோர்:

மதுரை மேயர்முத்து, ஜேப்பியார், சி. வி. அன்பு தம்பி, ப. அங்கமுத்து, த. சதானந்தம், பிச்சை கண்ணு மற்றும் பலர்.

### பூங்காநகர்

4-4-80 வெள்ளி மாலை 7 மணிக்கு ராசப்பசெட்டித்தெருவில் (கந்தகோட்டம் அருகில்) பி. கே. கேசவன் தலைமையில் பேசுவோர்:

அடியார், பா. வளர்மதி அன்புரோஸ், வண்ணை கோவிந்தன், இரா. துரைராசன், நாகராஜன், தமிழ் மன்னன், சச்சிதானந்தம் மற்றும் பலர்.

### லாயிட்ஸ் காலனி

5-4-80 சனி மாலை 7 மணிக்கு லாயிட்ஸ் காலனி அருகில் செ. மணிமாறன் தலைமையில் பேசுவோர்:

மதுரை மேயர்முத்து, ஜேப்பியார், புலவர் கதிரவன், ஜெ. பாலன், மு. கிருஷ்ணன், ராஜேந்திரன், பி. எஸ். ராஜு, துரையரசன், முருகேசன், திருநாவுக்கரசு, கோபால், மகேந்திரன், சரவணன் மற்றும் பலர்.

### மடுவின்கரை

5 4 80 சனி மாலை 7மணிக்கு 147-வது வட்டம் கிண்டி பாரதி நகரில் சி. கே. கருப்பையா தலைமையில் பேசுவோர்:

ஐசரிவேலன், ராமலிங்கம், எஸ். வி. கந்தசாமி, அ. தமிழ்செல்வன், சா. துரைசாமி, என். எஸ். மோகன் மற்றும் பலர்.

இரவு 9 மணிக்கு நெல்லை கலையரசன்-மாலதி குழுவினர் கலாநிகழ்ச்சி உண்டு

---

"அவரவர் ஜெயித்த இடம் அவரவர்க்கு" என்ற

## கருணாநிதியின் 'பார்முலா'

# இ. காங்கிரஸ் நிராகரிப்பு

## சென்னை நகரில்போட்டியிட இந்திரா காங்கிரஸ் தீவிரம்

சென்னை, ஏப் 3 - கடந்த சட்டசபைத் தேர்தலில் வெற்றி பெற்ற அந்தந்த கட்சிகளே, மீண்டும் அதே தொகுதிகளில் போட்டியிட வேண்டும் என்ற கருணாநிதியின் பார்முலாவை இ. காங்கிரஸ் ஏற்றுக்கொள்ளவில்லை.

நாடாளுமன்றத் தேர்தலில் கடந்த தேர்தலில் வெற்றி பெற்றவர்களுக்கு அதே தொகுதி ஒதுக்கப்பட்டது போல் சட்டசபை தேர்தலிலும் வெற்றி பெற்ற தொகுதிகள் அந்தந்த கட்சிக்கு ஒதுக்கப்படுமா என்று கருணாநிதியிடம் நிருபர்கள் கேட்டனர்.

அதற்கு கருணாநிதி அளித்தபதில் வருமாறு:-

அப்படி ஒரு அடிப்படையில் தான் கடந்தநாடாளுமன்ற தேர்தலின்போது தொகுதிகள் பங்கிட்டுக் கொள்ளப்பட்டன. தர்மபுரி தொகுதியில்மாத்திரம் கே. ராமமூர்த்தி, தர்மபுரியை விடுத்து கிருஷ்ணகிரியில் போட்டியிட விரும்பிய காரணத்தால் தர்மபுரி தொகுதியில் மாத்திரம் அவர்களுடைய விருப்பத்தின் பேரிலேயே தி. மு. க. போட்டியிட்டது, எனவே அந்த "பார்முலா" அடிப்படை) வர இருக்கிறசட்டமன்ற தேர்தலுக்கும் பொருந்தும்.

இவ்வாறு கருணாநிதி கூறினர்.

இதை தமிழ்நாடு இ. காங்கிரஸ் தலைவர் எம். பி. சுப்பிரமணியம் மறுத்தார்.

தி.மு.க.வெற்றி பெற்ற இடத்தில் இ. காங்கிரசும் போட்டியிடலாம் என்று எம். பி. சுப்பிரமணியம் கூறினர்.

கடந்த தேர்தலில் வெற்றி பெற்ற இடங்களிலேயே மீண்டும் அந்தகட்சிகள் போட்டியிடவேண்டும் என்பது இல்லை. உதாரணமாக திமுக வெற்றி பெற்ற இடத்தில் காங்கிரஸ் கட்சி போட்டியிடலாம் என்று எம்.பி. சுப்பிரமணியம் திட்டவட்டமாகத் தெரிவித்து கருணாநிதி சொன்ன பார்முலாவை காங்கிரஸ் ஏற்காது என்பதைத் தெளிவு படுத்தினர்.

சென்னை நகரில் பல தொகுதிகளில் கடந்த சட்டசபைத் தேர்தலில் தி மு. க. வெற்றிருந்தது. அந்தத் தொகுதிகளில் பலவற்றுள் காங்கிரஸ் வேட்பாளர்களை நிறுத்த இ. காங்கிரஸ் ஆலோசனை நடத்திவருகிறது.

---

## ஆரணியில் கண்டனக் கூட்டம்

ஆரணி, ஏப் 3- ஆரணி கொசப்பாளையம் தர்ம ராஜா கோவில் திடலில் 6-ந்தேதி மாலை 6 மணிக்கு டி. வடிவேல் தலைமையில், தமிழக சட்டசபைக் கலைப்பைக் கண்டித்து, அனைத்திந்திய அண்ணா தி.மு.க. மற்றும் தோழமைக் கட்சிகளின் கண்டனக் கூட்டம் நடக்கிறது.

இக்கூட்டத்தில் அன்பு ரோஸ், செங்கம் ஜப்பார், தளபதி ஆகியோரும் மற்றும் பலரும் பேசுகிறார்கள்.

---

எம். பி. எஸ்சுக்கு

## பாராட்டுக் கூட்டம்: மூப்பனர் இளையபெருமாள் புறக்கணிப்பு

சென்னை, ஏப். 3- தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் தலைவராக புதிதாக நியமிக்கப்பட்டுள்ள எம். பி. சுப்பிரமணியத்திற்கு நடந்த பாராட்டு விழா பொதுக் கூட்டத்தில் கருப்பையா மூப்பனர், இளையபெருமாள் கலந்து கொள்ளாமல் புறக்கணித்தனர்.

தென்சென்னை மாவட்ட இந்திரா காங்கிரஸ் சார்பில் இக் கூட்டத்தை ஏற்பாடு செய்து நடத்தினர்.

புதிய தலைவர் எம். பி. சுப்பிரமணியத்தைபாராட்டும் கூட்டத்தில் கருப்பையா மூப்பனர், இளையபெருமாள், ஹாஜாஷெரீப், சின்ன அண்ணாமலை, எஸ். கே. டி. ராமச்சந்திரன் ஆகியோரும்கலந்து கொள்வதாக விளம்பரப்படுத்தப்பட்டிருந்தது. ஆனால் இவர்கள் யாருமே கலந்து கொள்ளாமல் கூட்டத்தை புறக்கணித்தனர்.

---

## 57-வது வட்ட பொது உறுப்பினர் கூட்டம்

சென்னை, ஏப் 3- சென்னை 57வது வட்ட கழக பொது உறுப்பினர்கள் கூட்டம்சுந்தர முதலி தெருவில் இன்று வியாழன் இரவு 7 மணிக்கு இரா. துரைராசன் முன்னிலையில் வட்ட அமைப்பாளர் விஷ்ணுகுமார் தலைமையில் நடைபெறுகிறது.

---



## இதோ ஒரு 'ரத்தினகிரி சாமியார்'

வட ஆற்காடு மாவட்டம் ரத்தினகிரியில் ஒரு சாமியார் இருந்தார்.

அவர் வாய்திறந்து பேசமாட்டாராம்: அவரிடம் வரும் பக்தர்கள் கேள்விகளை எழுதி அவரிடம் நீட்டினுல் அவர் பதில் எழுதிக்காட்டுவாராம்.

இப்போது கருணாநிதியும் அந்தமாதிரி ஆகிவிட்டார் போலிருக்கிறது,

தேர்தலில் நிற்க "டிக்கெட்" கேட்டு வந்த தி.மு.க வினருக்கு "வேட்பாளர்களைப் பற்றி விவரம் கேட்கப் போவது ஏப்ரல் 12ந்தேதிக்கு மேல்தான்; அதுவரை எங்களை வேறு பணி புரிய அனுமதியுங்கள்" என்று சாக்பீசால் எழுதிக்காட்டியிருக்கிறார்.

இந்திரா காங்கிரஸ்-தி. மு. க. கூட்டணி ஜெயித்தால் முதலமைச்சர் யார் என்று சொல்ல கருணாநிதிக்கு வாய்ப்பூட்டு இருக்கிறது!

எந்தக் கட்சிக்கு எத்தனை தொகுதிகள் என்று சொல்ல- கருணாநிதிக்கு வாய்ப்பூட்டு இருக்கிறது.

எந்தெந்தத் தொகுதியில் எந்தக் கட்சி போட்டியிடும் என்று சொல்ல கருணாநிதிக்கு வாய்ப்பூட்டு இருக்கிறது.

இதுநாடறிந்த கதை,
ஊரறிந்த விஷயம்!
ஆனல்-

தி. மு. க. காரர்களிடம் பேசுவதற்குமா வாய்ப்பூட்டு?

ஐயோ பாவம் கருணாநிதி!

இதுவும் ஒருவகையில் நல்லதுதான்!

பேசினுல் பொய் பொய்யாகப் பேசுகிறார்!

பேனா எடுத்து எழுதினல் புளுகு, புளுகாக எழுதுகிறார்.

சாக்பீசை மட்டும் கையில் எடுக்கட்டும்: அப்போதாவது உண்மையை எழுதுகிறாரா பார்ப்போம்.

சந்தா விவரம்

1 வருடச் சந்தா தொகை ரூ. 130
6 மாதச் சந்தா தொகை ரூ. 65
3 மாதச் சந்தா தொகை ரூ. 32.50

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.

நிர்வாகி:
"அண்ணு"
275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-600014


# அண்ணு



## நெல் அறுவடை நேரம் தெரியாத விவசாய அமைச்சர்

சென்னை, ஏப். 3-நெல் அறுவடை எப்போது என்பது இந்தியவிவசாயத் துணை அமைச்சருக்கே தெரியவில்லை. நிருபர்கள் நினைவுப்படுத்தினர்கள்.

சென்னையில் மத்தியவிவசாய அமைச்சர் ஆர். வி. சாமினதன் நிருபர்களுக்கு பேட்டிஅளித்த விவரம் வருமாறு:

கேள்வி : நெல் விலை உயர்த்தப்படுமா?

ஆர்.வி.எஸ்.:-இதுபற்றி பரிசீலித்துக்கொண்டு இருக்கிறோம்.

நிருபர் :- கோதுமைக்கு விலை உயர்வு மத்திய அரசு அறிவித்து இருக்கிறது. நெல்விலையை உயர்த்த வில்லையே?

ஆர்.வி.எஸ்: நெல் அறுவடை சமயத்தில் இது பற்றி கவனிக்கப்படும்.

நிருபர்: இப்போது சம்பா அறுவடை நடந்து கொள்முதல் நடந்து வருகிறதே. தஞ்சையிலும்மற்ற சில மாவட்டங்களிலும் சம்பா கொள்முதல் நடைபெறுகிறதே?

ஆர். வி. எஸ்: அப்படியா? நெல் விலையை உயர்த்த மத்திய அரசு தீவிரமாக பரிசீலித்து வருகிறது.

நிருபர்: நெல்விலையை உயர்த்த வேண்டும். ரூ130 அளவுக்கு உயர்த்த வேண்டும் என்று முந்தைய அரசு கோரியது. ஆனல் கோதுமை விலை உயர்த்தப்பட்டது. நெல்லின் உயர்த்தப்படவில்லையே?

ஆர்.வி.எஸ்: இரண்டு ரூபாய்தான் கோதுமைக்கு உயர்த்தப் பட்டது. அந்த அளவில் உயர்த்தினல் போதுமா?

நிருபர்: நாமும் தொடர்ந்துநெல்விலைஉயர்வுக்கு கேட்டு வருகிறோம். கோதுமை விலை உயர்த்தப்பட்ட போது நெல் விலை கவனிக்கப் படாமல் போய் விட்டதே?

ஆர். வி. எஸ்: அரசாங்கம் தீவிரமாக பரிசிலித்து வருகிறது.

நிருபர்:- நீங்கள் விவசாய அமைச்சராக இருக்கும்போது அந்தப் பதவியை பயன்படுத்தி நெல் விலையை உயர்த்தக் கூடாதா?

ஆர்.வி.எஸ்: இந்தப் பிரச்சினை மத்திய அரசின் தீவிர பரிசீலனையில் இருக்கிறது.

## அரிஜன தபால் அதிகாரி முன்பு மறியல்

கரூர், ஏப். 3- கரூர் அருகே தளவாபாளையம் என்ற ஊரில் உள்ள தபால்நிலையத்திற்கு கணேசன்என்பவர்தபால்அதிகாரியாக நியமிக்கப்பட்டார். இவர் அரிஜனப் பிரிவைச் சேர்ந்தவர்.

கணேசன்பதவிஏற்கவந்த போது அப்பகுதியைச் சேர்ந்த சுமார் 200 பேர் அவரை தபால் நிலையத்திற்குள் செல்லவிடாமல் தடுத்தனராம்.

தபால் நிலையத்தை அரிஜன குடியிருப்புப் பகுதிக்கு மாற்றவும் கூடாது என இவர்கள் கோஷமிட்டனர்.

இதையடுத்து போலீசார் அப்பகுதிக்குவிரைந்து சென்று கூட்டத்தைக் கலைத்தனர். அப்பகுதியில் போலீஸ் பாதுகாப்பு போடப்பட்டுள்ளது.



## புரட்சித்தலைவர் தயாரித்த கிருஷ்ணநதி நீர் திட்டம்: மத்திய அரசு பரிசீலனை

சென்னை, ஏப். 3-புரட்சித் தலைவர் தயாரித்தத் திட்டமான சென்னைக்கு கிருஷ்ண நீர் கொண்டு வருவது பற்றி மத்திய அரசு பரிசீலித்து வருகிறது.

சென்னை நகர குடிநீர் தேவையைநிறைவு செய்ய ஆந்திராவில் கிருஷ்ண நதியிலிருந்து சென்னைக்குத் தண்ணீர் கொண்டுவரும் திட்டத்தை புரட்சித் தலைவர் தயாரித்தார்.

இது சம்பந்தமாக ஆந்திரா முதல்வருடனும், அதிகாரிகளுடனும புரட்சித்தலைவர் ஆலோசனை நடத்தி இருந்தார்.

இதுபற்றி இப்போதுமத்திய நீர்க்கமிஷனும், மத்திய அரசும் ஆலோசனை நடத்திவருகின்றன. அநேகமாக 1981ம் ஆண்டு பிப்ரவரி மாதம் இது பற்றிய அறிக்கை வெளிவரும் என்று தெரிகிறது.

கிருஷ்ண நதியிலிருந்து சென்னைக்குக் கால்வாய் மூலம் தண்ணீர் கொண்டு வருவதா? அல்லது பெரிய குழாய்கள் மூலம் கொண்டு வருவதா என்ற பிரச்சினை பற்றி தீவிர ஆலோசனை நடக்கிறது.

சென்னை மத்திய

## கூட்டுறவு வங்கி ஆலோசனை குழு ராஜினமா

சென்னை, ஏப். 3- சென்னை மத்திய கூட்டுறவு வங்கியின் ஆலோசனைக் குழு ராஜினமா செய்துள்ளது.

இந்தக் குழுவின் தலைவர் வழக்கறிஞர் ராமகிருஷ்ண பாபு வி. அங்கமுத்து, வக்கீல் பொன்னுசாமி வளர்மதி, வண்ணை சண்முகம் ஆகிய ஐவரும் ராஜினமாசெய்துள்ளனர்.

குழுவின் தலைவர் ராமகிருஷ்ணபாபு இந்த ராஜினமா கடிதங்களை கூட்டுறவுப் பதிவாளருக்கும், தனி அதிகாரிக்கும் அனுப்பியுள்ளார்.



### திருமணம் நன்றி அறிவிப்பு

சென்னை, ஏப் 3- கழகப் பேச்சாளர் திருமதி லட்சுமி முத்துவின் மகள் திருமணத்தை புரட்சிதலைவர் நடத்தி வைத்தது தெரிந்ததே.

மணவிழாவில் கலந்து கொண்ட சபாநாயகர் முனு ஆதி பண்ருட்டி ராமச்சந்திரன் திருமதி அரங்கநாயகம்ஜேப்பியார் மற்றும் வாழ்த்துக்கள் அனுப்பிவைத்த கழகத் தோழர்கள், நண்பர்களுக்கும் திருமதி லட்சுமிமுத்து பி. கே. காளிமுத்து இருவரும் நன்றி தெரிவித்துள்ளனர்.

19வது வட்டம்

## புதிய உறுப்பினர் கார்டு

சென்னை, ஏப். 3 சென்னை 53-வது வட்ட சார்பு மன்ற மற்றும் கழகத்தோழர்கள் தொழிற்சங்க தோழர்கள் - புதிய உறுப்பினராக சேர்ந்தவர்கள் காலை 10மணி முதல் 12மணி வரையிலும் மாலை 5மணி முதல் இரவு 9மணி வரையிலும் 1 பந்தர் தெரு கிளையில் உறுப்பினர் அட்டையை பெற்றுக் கொள்ளுமாறு அமைப்பாளர் கே. எல்லப்பன் கேட்டுக் கொண்டுள்ளார்.

## நீண்ட நாள் காங்கிரசார் தவிர புதுமுகங்களுக்கு டிக்கட் இல்லை

புதுடெல்லி, ஏப் 3- நீண்டநாள் காங்கிரசார் தவிர, புதிதாகக் காங்கிரசில் சேர்ந்தவர்களுக்கு டிக்கெட் கொடுக்கக் கூடாது என்று இ.காங்கிரஸ் மேலிடம் உத்தரவிட்டுள்ளது.

கடந்த 3 ஆண்டுகளாக இ. காங்கிரஸ் கட்சி பதவியில் இல்லை. அந்தக் காலகட்டத்தில் இ. காங்கிரசில் இருந்து கடுமையாகப் பாடுபட்டவர்களுக்குத் தேர்தல் டிக்கெட்டில் முன்னுரிமை தரப்படும் என்று காங்கிரஸ் பொதுச் செயலாளர் அந்துலே கூறினர்.

நாடாளுமன்றத் தேர்தல் சமயத்தில் இ. காங்கிரசில் சேர்ந்தவர்களுக்கு சட்டசபை கட்சித்தலைவர் பதவிதரக் கூடாது என்றும் முடிவு எடுக்கப் பட்டுள்ளது.

அதன்படி எஸ்.சி.சுக்லா, வசந்த தாதா பட்டீல், மோகன்லால் சுகாதியா, போன்ற புதிதாக கட்சிக்கு வந்தவர்களுக்கு இ. காங்கிரஸ் ஜெயித்தாலும் முதல்வர் பதவி கொடுக்கக் கூடாது என்றும் காங்கிரஸ் மேலிடம் முடிவு எடுத்துள்ளது.

புதிதாகக் கட்சிக்கு வந்த சந்தர்ப்பவாதிகளை அடையாளம் கண்டு அவர்களையும் புறக்கணிக்குமாறு காங்கிரஸ் மேலிடம் கேட்டுக் கொண்டுள்ளது.